[22nd September 1961

SRI R. SRINIVASA IYER : ஸார், இந்த ரவுண்ட் டாணுவுக்குக் கட்டப்போகிற சப்-வே ஸ்கீம் ஏறக்குறைய 3 வருஷங்களாக பேசப்பட்டு வருகிறது. இந்தத் தடவை பணம் ஒதுக்கப்பட்டிருப்பதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இந்தத் தடவையாவது கார்ப்பரேஷன் அப்ளிகேஷன் அனுப்பி விட்டதா ? பிளான், எஸ்டிமேட் எல்லாம் அனுப்பப் பட்டதா ? அப்படியாயின், இந்தத் தடவையாவது இந்த ஸ்கீமை ஆரம்பிப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்ளிகேஷன் போன வருஷத்திலேயே வந்து விட்டது என்று சொன்னேன். இந்த ஆண்டில் வேலை எடுத்துக் கொள்ளப்படும் என்றுதான் நான் நம்புகிறேன்.

*Rural population—Migration to other States*

* 1717 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்திலிருந்து கிராமப்புற மக்கள் பிற மாநிலங்களுக்கும் பிற நாடுகளுக்கும் வெளியேறிச் செல்வது சர்க்கார் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா ?

(இ) அப்படியானல், அதைப் போக்க சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) There have been reports about illicit emigration to Ceylon of persons from the coastal districts of this State. There has been no report about large scale migration to other States of this country.

(*b*) Illicit emigration has already been banned by Government of India. The Government have tightened up the existing preventive measures to check illicit emigration to Ceylon. Wide publicity in the press and over the All-India Radio has been and is being given about the evils of illicit emigration.

SRI S. M. ANNAMALAI : சிலோன் போன்ற பிற நாடுகளுக்கு மக்கள் செல்வதின் முக்கியமான காரணம், வறுமையினுல் என்பதும், அதேபோல் வேலை இல்லாத் திண்டாட்டத்தினுல் என்பதும் சர்க்காருக்குத் தெரியுமா ? அப்படியானல், இவர்களுடைய அவல நிலையைப் போக்குவதற்கு, நம் நாட்டிலே நல்ல வேலை வாய்ப்புத் தருவதற்குத் திட்டங்கள் தீட்ட இந்தச் சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சிலோனுக்கு நாங்கள் திருட்டுத்தனமாகத்தான் போவோம் என்று பயமுறுத்துவதில் பிரயோஜனமில்லை. எல்லோருடைய வாழ்க்கை நிலைமையும் உயர்த்துவதற்கான திட்டங்கள் போடப்பட்டு, அவைகள் நிறைவேற்றப்பட்டு வருகிறது.

*Fair Price Shops*

* 1718 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Home be pleased to place a statement on the table of the House, showing the number of Fair Price Shops, and the quantities of rice sold through them, in each district from January to June 1961, monthwar?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement[a] giving the required information is placed on the table of the House.

a Printed as appendix III on page 507 infra.

22nd September 1961]

**Sri M. KALYANASUNDARAM** : திருச்சி ஜில்லாவில், மார்ச்சு மாதத்திலிருந்து நியாய விலைக் கடைகள் மூடப்பட்டிருக்கின்றன. அதற்குக் காரணம் என்ன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : சென்ற மே மாதத்தில் நான் கலெக்டர் அவர்களோடு பேசிக் கொண்டிருந்தபோது, அவர்கள் இப்போது வாங்குவார் இல்லை என்று சொன்னார்கள். அப்போது அந்தக் கடைகளை மூடாமல், திறந்து வைப்பதில் என்ன பயன் ?

**Sri N. MARUDACHALAM** : ஸார், சில நியாய விலைக் கடையில் சொந்தக்காரர்கள், தானியங்களை கள்ள மார்க்கெட்டில் விற்று வருகிறார்கள். அப்படி விற்றவர்களை கோர்ட்டிலே கொண்டுவந்து நிறுத்தினால், அவர்கள்மேல் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : கள்ள மார்க்கட்டில் விற்றதாகத் தகவல் கிடைத்தால், பரிசீலனை செய்து தக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

*Plantations—Lease of forest lands for*

* 1719 *Q.*—**Sri V. K. KOTHANDARAMAN** : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் எத்தனை ஏக்கரா நிலம் தேயிலை, காப்பி முதலியவைகளை பயிரிட வாடகைக்கு விடப்பட்டுள்ளது ?

(இ) எந்த ஆண்டு வரை வாடகைக்கு விடப்பட்டுள்ளது ?

(உ) அதை ரத்து செய்து சர்க்காரே எடுத்து ரப்பர், பாக்கு முதலியவைகளை பயிரிட உத்தேசமுண்டா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : (*a*) An area of 28·21 acres for cultivation of coffee and another area of 96·11 acres for combined cultivation of coffee and plantain had been leased out in Madurai North (Forest) Division. No forest land has been leased out for cultivation of tea.

(*b*) Out of the 28·21 acres leased out for cultivation of coffee, the lease in respect of 0·71 acre expired on 31st December 1953 and the lease of 27·50 acres to the Coffee Board would expire on 2nd February 1985. Out of the 96·11 acres leased out for combined cultivation of coffee and plantain, the lease in respect of an area of 8·50 acres would expire on 31st December 1967 while the leases in respect of the remaining area are reported to have expired during the period from 1953 to 1955.

(*c*) No, Sir.

**Sri K. PONNIAN** : தலைவர் அவர்களே, அந்நிய நாட்டுச் செலாவணிக்கு மிகவும் உகந்த தேயிலை, காப்பி, ஏலம் போன்ற பயிர்களை பயிரிடுவதற்குத் தனிப்பட்ட முறையில் சர்க்காரை அணுகினால், நிலங்கள் லீசுக்கு விடுவதில் சர்க்காரின் அபிப்பிராயம் என்ன என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அந்த இடங்களுடைய தகுதியையெல்லாம் பார்க்க வேண்டும். பார்த்து அது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. இதைப்பற்றித் தனியாக கேள்வி கேட்டால், விவரமாக பதில் அளிக்கப்படும்.